

# ராவிரா

ரங்கு கடையில் இலக்கிய விசாரங்கள் நடக்கும்போது 'ராவிரா' என்கிற ரா. விஜயராகவன்தான் பிரதான பாகம் வகிப்பார். ராகவன் திருச்சி கல்லூரியில் கெமிஸ்டரி வாத்தியார். அவர் மூலம் எனக்கு பூரம் என்பது மெர்க்குரி குளோரைடு என்பது தெரியும்.

ராகவன் தமிழும் படித்தவர்; குறிப்பாக பிரபந்தத்தில் ஈடுபாடு உண்டு. புதுமைப்பித்தனைச் சந்தித்துப் பேசியிருப்பதாகச் சொல்லி யிருக்கிறார். ஏதோ ஒரு பத்திரிகையில், 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' 'கைக்கிளை' போன்ற வியாசங்கள் எழுதியிருக்கிறார். மில்ட்டன், காளிதாசன் என்றெல்லாம் நிறையவே பேசுவார்.

ரங்குவும் டாக்டர் வீட்டு வைத்தாவும் அவரை உசுப்பிவிட்டு, "தமிழ் இலக்கியத்தில் எங்க எல்லாம் முலை வரதுன்னு கொஞ்சம்

சொல்லுமேன் அண்ணா" என்றால் உடனே உற்சாகமாகி சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம் என்று விலாவாரியாக கொட்டேஷன் கொடுத்துக்கொண்டே போவார்.

அவர்தான் எங்கள் உள்ளூர் இன்டெலக்சுவல். ரங்கு கடைக்கு தினம் புகையிலை போட்டுக்கொள்ள வருவார். கதர் ஜிப்பா போட்டுக்கொண்டு ஒல்லியோ ஒல்லியாக இருப்பார். கிள்ளியெடுக்க சதை கிடையாது. பேசும்போது தொண்டைக் குண்டு நடமாடும். கையெல்லாம் பச்சை நரம்பு தெரியும். தொட்டுத் தொட்டுப் பேசுவார். சின்னப் பையன்கள் என்றால் அவருக்கு இஷ்டம். அவரைச் சுற்றிலும் எப்போதும் ஒரு கோஷ்டியே உலவும். அவர்கள் எல்லாம் பேசிக்கொண்டிருக்கிறபோது நான் ஒரு மூலையில் நின்று கொண்டிருப் பேன். அவ்வப்போது என்னைப் பார்த்து, "ஆத்துக்குப் போடா, இதெல்லாம் கேட்டா கெட்டுப்போயிடுவே" என்று அதட்டுவார் போக மாட்டேன்.

அவரிடம் எனக்கு ஒரு வசீகரம் இருந்தது. அதே சமயம் அவர் மேல் காரணமில்லாமல் ஓர் இரக்கமும் ஏற்பட்டது. ஏதோ ஒரு வகையில், கண்களிலோ அல்லது சற்றே அயர்ந்த தோற்றத்திலோ, அவர் ஒரு வகைப்பட்ட மானுடனின் அத்தனை சோகங்களையும் தாங்கிக்கொண்டிருப்பவர் போல, ஏதோ ஒரு வைஷ்ணவ ஏசு கிறிஸ்துபோலத் தோன்றினார். அவர் சுமந்த சிலுவை என்ன என்பது பல வருஷங்கள் கழித்துத்தான் புரிந்தது.

'ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித்து எழுந்த என் தடமுலைகள்
மானிடர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே'

என்று உணர்ச்சிகரமாகப் பாடிவிட்டு, "என்ன அர்த்தம்?" என்று என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிவிட்டு, "நீ இன்னும் போலியா?" என்பார்.

ராகவன் எங்களுக்கு எதிர்சாரியில் தாஸ் வீட்டுக்கு இரண்டு வீடு தள்ளியிருந்தார். வீட்டுக்குச் சாப்பிட மட்டும் போவார் என்று கேள்விப்பட்டேன். மற்ற நேரங்களில் முனிசிப்பல் லைப்ரரியில் போய் உட்கார்ந்துகொள்வார். அந்த லைப்ரரி பஸ் ஸ்டாண்டு அருகில் கூர்ச்சையாக மேசை போட்டு 'சுதேசமித்திர'னைக் கயிற்றில் கட்டித் தொங்கவிட்டிருக்கும். பீரோவைத் திறந்தால் ஒரு மாதிரி புராதன வாசனை வரும். யாரோ ஒரு குப்புசாமி முதலியார் சாகுந்தருவாயில் கொடுத்து விட்டுப்போன பழுப்புப் புத்தகங்கள் ஏராளம். பாதி இங்கிலீஷ் பாதி தமிழ். ஒண்ணும் படிக்க விளங்காது.

ராகவனுக்கு மட்டும் இதெல்லாம் 'டிரெஷர்' என்று ஜன்னல் வெளிச்சத்தினருகில் உட்கார்ந்துகொண்டு ஆழ்ந்து படிப்பார். புத்தகத்தை எட்டிப் பார்த்தால் "இவர் பதிற்றுப்பத்தின் கண் உள்ள ஆறாம்பத்தால் ஆடு கோட்பாடுச் சேரலாதனைப் புகழ்ந்து பாடி

அவனாற் கலணிக என்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் காணமும் அளிக்கப்பட்டு" என்றெல்லாம் இருக்கும்.

லைப்ரரி மூடியதும் பக்கத்தில் டென்னிஸ் கிளப்பில் போய் முன்னறையில் 'ஆக்ஷன் பிரிட்ஜ்' 501 என்று ஆடுவார். புகையிலை போட்டுக்கொண்டு துப்பாமல், 'ஆழு பிழி' (ஆறு பிடி) என்று கையால் ஆரனடிப்பதுபோல் காட்டிக்கொண்டிருக்கும்போது, நான் பாட்டி திட்டுவாள் என்று ஓடிவந்துவிடுவேன்.

ராத்திரி பத்து பத்தரை மணிக்கு இரைச்சலாக நண்பர்களுடன் பேசிக்கொண்டே வீட்டுக்குத் திரும்பும்போது தெரிவார். கொஞ்ச நேரம் கழித்துச் சாப்பிட்டு வந்து வீட்டு வாசலில் கயிற்றுக் கட்டில் போட்டு சகாக்களுடன் மறுபடி அரட்டை அடிப்பதைப் பார்க்க முடியும். இரைச்சலாகச் சப்தம் கேட்கும். அவர் குறட்டையும் எங்கள் வீடுவரை கேட்கும்.

ராகவனின் மனைவி எப்போதும் உள்ளேதான் இருப்பாள். ஒரே ஒரு தடவை ராகவன் என்னிடம் அவளுக்காக ஒரு செய்தி சொல்லி அனுப்பினார்.

"சாவியை அப்புகிட்ட கொடுத்துட்டு சினிமாக்குப் போகச் சொல்லு" என்று. நான் என்னுடைய மானசீகக் காரை ஓட்டிக் கொண்டு அவர்கள் வீட்டுக்குச் சென்று மரக்கதவைத் திறந்து உள்ளே போனபோது ராகவனின் மனைவி நடுக்கூடத்தில் நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். தாஸ் அவளை புஜத்தில் பிடித்து சுளுக்குப் போக தடவிக்கொண்டிருந்தான். என் செய்தியைக் கேட்டதும் "சாவி கொடுத்துட்டுப் போகச் சொல்லித்தா அது? சினிமாப் போலைன்னு சொல்லு. என்ன செய்யறது அது? அரட்டையா? திவ்யப் பிரபந்தமா? இலக்கியச் சர்ச்சையா? அதைத் தவிர அதுக்கு வேற என்ன தெரியுமாம்?" என்று இழுத்து இழுத்து என்னைப் போய்க் கேட்டாள்.

தாஸ் நான் வந்ததைக் கவனிக்காமல் கையை உருவி விடுவதிலேயே கவனமாக இருந்தான். அந்தக் கை சிவப்பாக இருந்தது. எனக்கு வயிற்றில் என்னவோ செய்தது. என்ன என்று தெரியவில்லை.

"நான் வெச்சன்னா பட்டுன்னு போயிடும்" என்றான் தாஸ், நான் திரும்பிச் சென்றபோது ராவிராவிடம் "மாமா, சினிமாக்குப் போகலையாம்" என்றேன்.

"கோபால் தாஸ் இருந்தானா?" என்று கேட்டார்.

ரங்கு, "ஓய் அவனோட என்ன குலாவல் வேண்டிக் கிடக்கு? ஏண்டா நாயேன்னு ஜோட்டால அடிக்க வேண்டாம்?" என்று கேட்டான். அதற்கு ராவிரா, "அதெல்லாம் ஒண்ணும் கிடையாதுடா ரங்கு. எனக்குச் சொல்லத் தெரியாதா?"

திடீர் என்று ஒருநாள் ரொம்ப சந்தோஷமாக இருந்தார். டிபிஜி கடையில் சூடப் பெப்பர்மிண்ட் வாங்கித் தந்தார். பௌர்ணமி

அன்று நாங்கள் எல்லோரும் கொள்ளிடம் போயிருந்தோம். ராகவன் அவர் வீட்டைக் கடக்கும்போது அது தன்னுடைய வீடு இல்லை போலக் கடந்தார்.

கொள்ளிட ஜலக் கண்ணாடியில் நிலா தத்தளிக்க அவரைச் சுற்றிலும் நாங்கள் யாவரும் உட்கார்ந்துகொண்டோம். கொள்ளிவாய்ப் பிசாசு என்பது ஃபாஸ்பின் வாயு என்று சொன்னார். ஷேக்ஸ்பியரின் ஒத்தெல்லோவிலிருந்து சில பகுதிகளைப் பேசி நடித்துக் காட்டினார். என்னைத் தனியாகக் கூப்பிட்டு, "டேய் நீ அன்னிக்கு எங்காத்துக்குப் போயிருந்தபோது கோபால் தாஸ் என்ன பண்ணிண்டிருந்தான்" என்று கேட்டார்.

"பேசிண்டிருந்தான் மாமா."

"பேசிண்டுதானே இருந்தான்? சரி." அப்போதுதான் அவர் பூரம் என்பது மெர்க்குரி குளோரைடு, பெர்க். குளோரைடு என்றெல்லாம் பேசினார். "ஒரு கிராம் போதும். ஆள் காலி" என்றார்.

வையாபுரிப் பிள்ளை பற்றிச் சொன்னார். ரிக் வேதத்தில் கிரிஃபித் அண்ட் வில்ஸன் மொழிபெயர்ப்பில் குறைகள் இருக்கிறது என்றார். புரியாவிட்டாலும் கேட்டுக்கொண்டேயிருந்தேன். நிலாவின் மெலிதான வெளிச்சத்தில் அவர் ஏதோ கிறிஸ்துமஸ் தாத்தாவைப் போல, பழைய ரிஷிபோலத் தோன்றினார். அவரிடம் என்ன என்னவோ சொல்ல வேண்டும்போல இருந்தது.

ராவிராவுக்கு ரேடியோவில் பேச அழைப்பு வந்தது. எங்களுக்கெல்லாம் சந்தோஷமாக இருந்தது. அவரும் உற்சாகமாகவே முள்ளு மூஞ்சியை சவரம் பண்ணிக்கொண்டு கொள்ளிடம் சலவை சாலையில் ஜிப்பாவை இஸ்திரி போட்டு, 'நாச்சியார் திருமொழியில் இலக்கிய நயம்' என்கிற அவர் கட்டுரையை எங்களுக்கு மூன்று தடவை வாசித்துக் காட்டிவிட்டாலும் அவர் குரலைப் பெட்டி மூலம் கேட்பதில் நாங்கள் எல்லாரும் ஆவலாகவே இருந்தோம். கிருஷ்ணா கபேயில் ஏற்பாடு செய்து வைத்திருந்தோம். சாயங்காலமே அவருக்கு ரேடியோ நிலையத்திலிருந்து 'ப்ளெஷர்' கார் வந்தது. ஊரே அவர் காரில் ஏறிப் போவதைப் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர் மனைவி வாசலுக்கு வரவில்லை.

திருச்சிராப்பள்ளியில் ஸ்டுடியோவுக்குப் போனவர் ஏழரைக்கே வந்துவிட்டார். ஒன்பதரைக்குத்தான் பேச்சு ஒலிபரப்பு. அந்த நாள்களில் டேப் எல்லாம் கிடையாது. சீக்கிரம் வந்துவிட்டாரே என்று நான் யோசித்துக்கொண்டிருக்கையில் ரங்கன் கடைப் பலகையைத் தட்டி உட்கார்ந்துகொண்டு, "பேசலை ரங்கு" என்றார்.

"ஏண்ணா?"

"இன்னைக்குன்னு பார்த்து நேரு பேசறாராம். எல்லா ஸ்டேஷன்லயும் ரிலே பண்ணச் சொல்லிட்டாளாம். அடுத்த மாசம் பதிநாலாம் தேதி வாங்கோன்னான். நான் போகப் போறதில்லை."

கொஞ்சம் சோர்வுடன் நேருவைக் கோபித்துக்கொண்டு வீட்டுக்குப் போனார்.

எட்டரை மணிக்கு, கடை மூடும் நேரத்துக்குத் திரும்பி வந்தார்.

"என்னண்ணா புகையிலை தீர்ந்துபோச்சா?"

"இல்லை ரங்கு, இன்னிக்கு ராத்திரி இங்க வந்து படுத்துக்கலா மான்னு பாக்கறேன்."

"ஏண்ணா? ஒரே கொசு இங்க."

"எனக்கு ஆத்துக்குப் போகப் பிடிக்கலை ரங்கு." பக்கத்தில் கோவிந்து வழக்கம்போல ஒரே திசையில் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தவனை நோக்கி, "இவன்தான்டா தேவலை. நம்மாழ்வார் மாதிரி ஒரு விதமான பிரக்ஞையும் இல்லாம... கவலையும் இல்லாம... ரங்கு கொஞ்சம் சல்பேட்டா அல்லது ஜிஞ்சர் வேண்டுமே! ஏற்பாடு பண்ணித் தருவியா?"

"அதுக்கென்ன! என்ன ஆச்சு சொல்லுங்கோ."

"நேரா ஆத்துக்குப் போனேனா, கதவைத் திறந்துண்டு, உள்ள போறேனா! தாஸ் இருக்கான் பாரு..." பேச்சை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்து "டேய் போடா ஆத்துக்கு" என்று விரட்டி விட்டார். நான் தயங்க, 'போடான்னா' என்று கண்களைப் பெரிசாக விழித்து முதன்முறையாக என்னை அடித்தார்.

ராத்திரி கோடைப் பந்தலில் படுத்துக்கொண்டிருந்தபோது எனக்குத் தூக்கம் வரவில்லை. மெல்ல ரங்கு கடைப்பக்கம் போனேன். மூடின கடையின் நம்பர் பலகைகளுக்கு அருகில் இருந்து குறுகலான பகுதியில் பொட்டலம் சோடா பாட்டில் சகிதமாக, தலையில் துண்டு கட்டிக்கொண்டு தனியாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார் என்னைப் பார்த்தபோது சலனமில்லாமல் இருந்தார்.

"மாமா உடம்பு சரியில்லையா?"

"இல்லைம்மா."

"அம்ருதாஞ்சனம் எதாவது கொண்டுவரட்டுமா?"

அவர் என்னைத் தோளில் தொட்டு நேராகச் சற்றே கலங்கிய கண்களால் பார்த்து சற்றே போதையில் "கல்யாணம் பண்ணிக்காத" என்றார்.

**தா**ஸ் எப்போதாவதுதான் ரங்கு கடைக்கு வருவான். மறுநாள் அவன் வந்தபோது நாங்கள் எல்லோரும் மவுனமாகிவிட்டோம். அவனிடமிருந்து குல்கந்து வாசனை வீசியது. தபலா வித்வான் மாதிரி குறுக்கு வாட்டாக மார்பில் திறந்து, டபேட்டா சில்க்கில் சட்டை போட்டிருந்தான்.

"விஜி வந்தாரா இங்க?"

"இல்லையே தாஸு!"

"வியாபாரமெல்லாம் எப்படி ரங்கு?"

"எல்லாம் தாஸ் தயவு வேணும்!"

'தயவுதானே' என்று தாஸ் ஒரு மாதிரி சப்தமில்லாமல் சிரித்து ரங்குவின் அந்தரங்க பாகத்தைச் சற்றும் எதிர்பாராமல் வவ்வென்று பிடித்துத் திருகிவிட்டான். ரங்கு இம்சை தாங்காமல் அலற தாஸுக்கு அதுதான் ஹாஸ்யம் என்று தெரிந்தது. கண்ணில் நீர்வரச் சிரித்தான்.

தாஸ் பணக்காரன். சித்திரை வீதியிலேயே மிகப் பெரிய வீட்டுக்குச் சொந்தக்காரன். ஜைன மதத்தைச் சேர்ந்தவனானாலும் பெருமாள் பங்குனி சித்திரைத் திருநாட்களில் வீதி வலம் வரும்போது தாஸ் வீட்டில் கண்டிப்பாக நிற்பார். சீமான்தாங்கிகள் சந்தனக்காப்பு கொடுக்கக் கண்ணில் ஒற்றிக்கொள்வான். சாமியார்களையும் வீட்டுக்கு அழைத்து வந்து பூஜையெல்லாம் பண்ணுவான். அந்த மாதிரிச் சாமியாரை தரிசிக்கத்தான் ஒரு முறை அவர்கள் வீட்டுக்கு வத்ஸலா வுடன் போய் எனக்கு ஒரு மாதிரி ஆகிவிட்டது. சாமியார் உடம்பில் ஒன்றும் அணியாமல் விபூதியாலும் மாலையாலும் எல்லாமே மறைத்திருந்தாலும், வத்ஸலா அதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தது ரொம்பக் கேவலமாக இருந்தது. வீட்டுக்குத் திரும்பி வந்ததும் அவளைக் கன்னத்தில் பளார் என்று அறைந்தேன், "எதுக்குடா?" என்றாள் கண்ணீருடன்.

இப்போது தாஸ் ராவிராவைப் பற்றி விசாரிக்க வந்திருந்தான். "எங்க அய்யங்கார் ரெண்டு நாளாக் காணும். சிஸ்டர் சொல்லிச்சு. உனக்கு ஏதாவது தகவல் தெரியுமா ரங்கு?"

"எனக்குத் தெரியாது தாஸ்."

"வந்தா தகவல் சொல்லி அனுப்பு வீட்டுக்கு." புன்னகைத்துக் கொண்டே சென்றான் தாஸ். அழகானவன்.

அவன் போனதும் ரங்கு வாயில் வந்தபடி அவனைத் திட்டி, "தாளி. குப்பைக்காரி பிச்சைக்காரியைகூட விட்டு வைக்க மாட்டான். சமயத்துக்குக் குண்டு ரமணியைக்கூடப் படுக்கப் போட்டிருக்கான்!"

"ரங்கு, மாமா எங்க போயிருக்கார்?" என்று ராவிராவைப் பற்றி விசாரித்தேன்.

திருவெள்ளறை போயிட்டு வரேன்னு சொல்லியிருக்கார். நிம்மதி இல்லைன்னு சொன்னார். ராத்திரி பூரா சண்டை.

**வெ**ள்ளிக் கிழமை மஹாளய அமாவாசைக்குப் பள்ளி லீவு விட்டிருந் ததால் காலை ரங்கு கடைக்குப் போனபோது வேளை கெட்ட வேளையில் மூடிக்கொண்டிருந்தான்.

"என்ன ரங்கு?"

“எம் பின்னாடி வாயேன்” என்றான்.

ராவிராவின் வீட்டுக்குப் போனபோது வாசலில் பச்சை மூங்கில் வைத்துச் சட்டி புகைந்துகொண்டிருந்தது. காதில் பூணூலை மாட்டிக் கொண்டு நாலு பேர் சிம்பு சீவிக்கொண்டிருந்தார்கள். உள்ளே போனால் ரா. விஜயராகவன் நெடுஞ்சாண்கிடையாகக் கூடத்தில் படுத்திருந்தார். கழுத்து வரையில் போர்த்தியிருந்தது. நடுக்கூடத்தில் நாற்காலியில், தலைமேல் கை வைத்துக்கொண்டு வெறித்துப் பார்த்துக் கொண்டு ராவிராவின் மனைவி உட்கார்ந்திருக்க, தாஸ் மற்ற ஏற்பாடுகளைச் சுறுசுறுப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தான். “போலீஸ் தொந்தரவு வரக்கூடாது” என்றெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

நான் தாஸையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தேன். அதை ஒரு முறை அவன் கவனித்து முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். நான் ராவிராவைப் பார்த்தேன்.

மூக்கிலும் வாயோரத்திலும் லேசாகப் பழுப்பாக நுரைபோலத் தெரிந்தது. முகம் கறுப்பாக இருந்தது.

ராவிரா பூரத்தைச் சாப்பிட்டுவிட்டாராம்.

நெற்றியில் புதிதாக நாமம் போட்டிருந்தது.

1983